உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - ஆனி - 2018 - ஜுன் இதழ் - 72

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

அழகுபொலி மாதரசி அம்புயத்தாள் கொண்டவளை

அருள்வடிவச் சிவபெருமான் அணைத்த தாயை

ஆலவாய் அமர்ந்தாளை அங்கயற்கண் ஆரமுதை

ஆலமுண்ட சிவன்மேனி பாதி பெற்ற

எழிலுருவை சங்கரிக்கே இளையவளாய் வந்தவளை

இனியதிரு முறைப்பொருளாய் இலங்கு வாளை

ஏதங்கள் நீக்கவென இங்குவந்த ஏந்திழையை

இன்மழலைக் கிளிகரத்தில் ஏந்து வாளை

அழலாடி உடனாட ஆலங்கா டுகந்தாளை

அணிதில்லை சிவகாமி ஆகி வந்த

அரிவையினைத் தேசுடைய அன்னைஅபி ராமியினை

அடிபணிவார்க் கருள்துணையை மாலை சூட்டிக்

கழனிவாசல் குடிகொண்ட திருநெல்லைக் கற்பத்தைக்

கரும்பனைய சொல்லாளைக் கண்டு தங்கள்

கைகுவிப்பார் முகம்பார்த்துக் கருணைபுரி தேனமுதைக்

காலமெலாம் வணங்கிடுவோம் கவலை தீரும்!

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

## ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

**நலமெய் யையனே யெல்லவர்க் கும்தெய்வ நாயகன்**
**பொதுவானாற்**
**சிலரை வாழ்வித்துஞ் சிலரொடு கோபித்துஞ் செய்வதே**
**னென்றாயேல்**
**குலவு மக்களைத் தந்தைபோற் சிட்டரைக் குளிர்ந்துதுட் டரைக்**
**காய்வர்**
**கலைக ணல்வழி வரச்செயுந் தண்டமுங் கருணையென்**
**றறிவாயே!**

சமுதாயத்திலே எந்தவொரு ஜீவனும் தனக்குச் சௌகரியங்கள், மகிழ்ச்சி, வசதிகள் ஏற்படுகின்ற காலத்திலே இவையாவும் தன்னுடைய உழைப்பிலே தனக்குக் கிடைத்தவை என்று எண்ணிக் கொள்கிறார்கள். இடர்ப்பாடுகள், சிரமங்கள், இழப்புக்கள் போன்றவை ஏற்படுகின்ற காலத்திலே அநீதியான முறையிலே தன்னை இறைவன் தண்டிக்கிறான் என்று குறைபட்டுக் கொள்கிறார்கள். அதிலும் சிலபேர் நான் என்ன பாவம் செய்தேன் எனக்கு மட்டும் கடவுள் இவ்வாறு சிரமத்தைத் தந்து பாடாய்ப்படுத்துகிறானே என்று புலம்புகிறார்கள்.

பெறுவதும், வருவதும் இறைவன் அருளாலும் நம்முடைய கர்மவினைப் பயனாலும் ஏற்படுகின்றன என்ற அடிப்படை உண்மையை யாரும் ஒப்புக் கொள்ள விரும்புவதில்லை. தான் ராப்பகலாக உழைத்துத் தன்னுடைய அறிவின் வீரியத்திலே கிடைத்தவையே, தான் பெற்ற செல்வங்கள், மாடு, மனை, கூட கோபுரங்கள் எல்லாம் என்று தலை நிமிர்த்திக் கூவுகிறான். துயரங்கள் வருகின்றபொழுது தான் முன்னே, பின்னே செய்த தவறுகள், குற்றங்களினாலே விளைந்த பயன்கள் என்பதை ஒப்புக்கொள்ள மறுக்கிறார்கள். தன்னை மட்டும் அநியாயமாகக் கடவுள் சோதிக்கிறான் என்றே புலம்புகிறார்கள். இதனை விடுத்து, காரண காரியங்களைப் பற்றி விரிவாகச் சிந்தித்தால் நன்கு புரியும்.

சிறு வயதிலே செய்த பிழைகள் - புகை பிடித்தல், புகையிலை

உபயோகித்தல், மதுவகைகளை அருந்துவது, விலை மாதர்களை அணுகுவது போன்ற தவறுகளாலே பிற்கால வாழ்க்கை நோய் நொடிகளாலும் பலமின்மை, எதிர்ப்புச் சக்தியின்மை, என்ற விளைவுகள் வருகின்றன என்பது உலகியல் உண்மை. அதே போல அந்த அந்தக் காலங்களிலே செய்ய வேண்டிய கடமைகளையும், கருமங்களையும் ஒழுங்காகச் செய்திருந்தால் வயதான காலத்திலே நோய் நொடியில்லாமல் ஆரோக்கியமாகப் பொருளாதார ரீதியாக, தேவைக்குரிய செல்வங்களைப் பெற்று நிம்மதியாக வாழ்கிறார்கள் என்பதும் யாவரும் அறிந்த உண்மையே.

அதே போல, தொடர்ந்து வரும் பிறவிகளிலே நாம் செய்த நல்வினை, தீவினைகளை நம்முடைய ஜீவனோடு ஒட்டிக் கொண்டு வருகிறது என்பதை நாம் ஒப்புக்கொள்ள மறுக்கிறோம். நம் குருமார்கள் விளக்கிச் சொன்னாலும் நம் மனம் ஒப்புக்கொள்ள மறுக்கிறது. தனக்கு மட்டும் அநியாயம் நிகழ்வதாகக் குமுறுகிறது.

இதன் பயனாக நம்மைச் சுற்றியுள்ளவர்களின் நிம்மதியையும் கெடுக்கிறது. அதனாலே தான் நம்முடைய சாஸ்திரங்கள் முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பதைப் பலவிதமான கதைகளினாலும், உவமைகளினாலும் விளக்கிச் சொல்லிப் புரிய வைக்கின்றன. ஆகவே யாவரும் நல்லவை, கெட்டவை தெரிந்து கொள்ளவும் அறவழியிலே செல்வதும் பெறுவதும் மிகவும் அவசியமாகிறது. எந்தச் சூழ்நிலையிலும் செல்வப் பெருக்கிலும் துன்பக் கடலிலும் இருந்தாலும் மனத்தை நடு நிலையாக, ஸ்திரமாக வைத்துக் கொள்வது என்பது ஆன்மீகத்தை விரும்புகிறவர்கள் புரிந்து கொண்டு செய்ய வேண்டிய கடமையாகும்.

*சற்குருநாதன் துணை*

*ஆசீர்வாதங்கள்!*

## இறையுணர்வு - நல்லன எல்லாம் தரும்

(டி.ஆர்.குருமூர்த்தி - பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர் )
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.

இறையுணர்வு மனிதனின் வாழ்வினை வளமாக்கும். அவரவர் நம்பிக்கைக்குரிய இறையுணர்வு வாழ்வில் எழும் சவால்களையும், பிரச்சினைகளையும் மனதைரியத்துடன் எதிர்கொண்டு, அவற்றிலிருந்து விடுபட உதவும். இறையுணர்வு என்பது அவரவர் வணங்கும் இறைவன் மீது நம்பிக்கை வைத்தலும் எவ்வித விருப்பமும், எதிர்பார்ப்பும் இன்றி, இறைவன் மீது அன்புகொண்டு இறைவன் காலடியில் சரண் அடைதலாகும். எல்லாம் நீயே என்று ஏற்றுக் கொள்வதாகும். எல்லா உலகமும் ஆனாய் நீயே, ஓசை ஒலியெல்லாம் ஆனாய் நீயே என்று திருநாவுக்கரசர் குறிப்பிடுவது நினைவில் கொள்ளத்தக்கதாகும். தூய இறையணர்வு கொண்டவரிடம் நம்பிக்கை இருக்கும். தெளிந்த அன்பு இருக்கும். கடின உழைப்பும், விடாமுயற்சியும் இருக்கும். இத்தகு குணங்கள் வாழ்வின் வளர்ச்சிக்கு வெற்றிப் படிகளாகும். அன்பே சிவம் என்றார் திருமூலர். சிவஉணர்வில் அன்பு இருக்கும் எனப் புரிந்து கொள்ளலாம் இன்பப் பெருக்கே இறையே பராபரமே என்றார் தாயுமானவர். உயிர் இன்புற்று வாழ அன்பு அவசியமாகின்றது. இறையுணர்வு அன்பைப் பெருக்கும் ஊற்றாக இருக்கின்றது.

மாணிக்கவாசகர், தமது திருவாசகத்தில் இறையுணர்வின் அனுபவத்தைக் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்

இன்பம் பெருக்கி இருள்அகற்றி எஞ்ஞான்றும்
துன்பம் தொடர்வுஅறுத்துச் சோதியாய் அன்புஅமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து

சொல்லுதற்கரிய சோதியாய்த் தோன்றும் உருவமே, அருவாம் ஒருவனே, ஆதியே நடுவே அந்தமே, பந்தம் அறுக்கும் ஆனந்தமாகடலே என இறைவனைப் போற்றுவார் மாணிக்கவாசகர். சொற்றுணை வேதியன் சோதிவானவன் என்பார் திருநாவுக்கரசர். சோதிவடிவான இறைவன் நம்வாழ்வில் துன்பம் தொடராவண்ணம்

அறுத்து, இருளை நீக்கி. இன்பத்தைப் பெருக்கி அருள்புரிவான். திருப்பெருந்துறை எம்பெருமான் என் உள்ளத்தில் அன்பு பெருகும் வண்ணம், எனது சிந்தையை ஊராகக்கொண்டு விரும்பித் தங்கியுள்ளான் என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார். இறைஉணர்வு அன்பைப் பெருக்கி, அதன் மூலம் நல்ல செயல்களைப் பெருக்கி, அல்லவற்றை நீக்கும். இதனால் வாழ்வில் இன்பம் தழைக்கும்.

இறையுணர்வு கொண்டவர்கள் மற்றவர்களை விட உயர்வான நிலையில் இருப்பார்கள் என்பதை யாவரும் பெற்று அறியா இன்பத்துள் வைத்தாய்க்கு எம்பெருமான் மற்று அறியேன் செய்யும் வகை என மாணிக்கவாசகர் விளக்குகின்றார். சிவஉணர்வு கொண்டோர் பெறுதற்கரிய சிவத்தத்துவம் பெறுவர் என்பது இதன்மூலம் புரிகின்றது. இறையுணர்வு வாயிலாக உண்மையற்றவைகளை உணர்ந்து, அவற்றிலிருந்து விடுபட முடியும். பொய்களிலிருந்து விலகலாம். இறைவன் மீது அன்பாகிக் கசிந்து கைதொழுது என்அப்பன் என நம்பிக்கை வைத்துக் கண்களில் நீர்மல்கி உருகிநிற்கும் தொண்டர்க்கு இறைவனது மலர்ச்சேவடி கிட்டும் என்பதை மாணிக்கவாசகர் கீழ்க்காணும் பாடலில் விளக்குகின்றார்.

புழுவினால் பொதிந்திடு குரம்பையில்
பொய்தனை ஒழிவித்திடும்
எழில்கொள் சோதி எம்ஈசன் எம்பிரான்
என்னுடை அப்பன் என்றுஎன்று
தொழுத கையினராகித் தூயமலர்க்
கண்கள் நீர்மல்கும் தொண்டர்க்கு
வழுஇலா மலர்ச் சேவடிக்கண் நம்
சென்னி, மன்னி, மலருமே

முகமெல்லாம் கண்ணீர் மல்க முன்பணிந்து ஏத்தும் தொண்டர் அகமலாது கோயில்இல்லை; ஐயன் ஐயாறனார்க்கே என அப்பர் தெரிவிக்கின்றார். இறைவன் மீது அன்பாகிக் கசிந்துருகி இறைவா நீயே துணை எனக் கண்ணீர் மல்கி வணங்கும் தொண்டனின் மனமே இறைவனது கோயிலாகும். உள்ளம் பெருங்கோயில் என்கிறார் திருமூலர். தீயவைகளிலிருந்து விலகி, வாழ்வின் உயர்நிலைக்குத்

தேவைப்படுகின்ற வாழ்வியல் நெறிகளைப் பெறுவதற்கு இறையுணர்வு உதவும். பெருமையின்றி, நற்செயல்கள் இன்றி, அறிவாற்றல் இன்றி, பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை, நெறியூட்டி, உலக வாழ்வியல் நெறிகளைத் தரும் இறையருள் என மாணிக்கவாசகர் நமக்குத் தெளிவுபடுத்துகின்றார்.

சீலம்இன்றி நோன்புஇன்றி செறிவேஇன்றி அறிவுஇன்றி
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலும்காட்டி வழிகாட்டி வாராஉலக நெறியேறக்
கோலம்காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே?

திருப்பெருந்துறை இறைவனை வணங்கி, இறையுணர்வோடு வாழ்ந்து வந்தால் நம் மனதில் இடம்பிடித்து நீங்காது நிற்கும் ஆணவம், மாயை, கன்மம் என்கிற மும்மலங்கள் தீயகுணங்கள் நம்மை விட்டு விலகிப் போகும். நம் உள்ளம் தேன்போல நமக்கும் மற்றவர்க்கும் சுவைக்கும், பயனும் தரும். பிறவி எனும் பெருங்கடல் நீந்திக் கரைசேர்ந்து மறுபிறவி என்பதிலிருந்து விலகலாம். மடநெஞ்சே தாமதிக்காமல் பெருந்துறையான் மலர்ப்பாதங்களைத் தொழுது வாழ்த்தினால் நமது அல்வினைகள் அகலும். இறையருள் கிட்டும்; இத்தகு இறைஉணர்வு தரும் நற்பயனினை மாணிக்கவாசகர். கீழ்க்காணும் பாடலில் சொல்ல நாம் தெரிந்து கொள்ளலாம்.

உள்ள மலம்மூன்றும் மாய, உருபெருந்தேன்
வெள்ளம் தரும், பரியின் மேல்வந்த – வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள்: வாழ்த்துக்
கருவும், கெடும், பிறவிக்காடு
காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டில் பரிபாகன் நம்வினையை – வீட்டி
அருளும் பெருந்துறையான் அங்கமல பாதம்
மருளும் கெட நெஞ்சே! வாழ்த்து

தாயே என்று இறைவனைச் சரணடைந்தால், இறையருள் நம் அகத்தே வந்து சேரும். இறையுணர்வோடு இறைவனை நோக்கிப் பயணிக்கும் போது தான் இந்த உலகத்தில் இருக்கின்ற வாழ்வியல் நெறிகள் தெரியப்படுகின்றன. இறையுணர்வு இல்லாதபோது அவற்றைப்பற்றி அறியாது இருக்கிறோம். செம்மையான

வாழ்விற்குரிய வாழ்வியல் நெறிகளை அறிகின்ற போது, இறையுணர்வோடு இறைவனுக்கு அடிமையாகிவிடுகிறோம் என மாணிக்கவாசகர் தெரிவிக்கின்றார்.

என்னால் அறியாப் பதம்தந்தாய்
யான்அது அறியாதே கெட்டேன்
உன்னால் ஒன்றும் குறைவுஇல்லை
உடையாய் அடிமைக்கு ஆர்? என்பேன்

இறையுணர்வு இறைவன் மீது ஆழ்ந்த அன்புடையவராக நம்மை ஏற்றிவைக்கும். மறுபிறவி என்பதை நீக்கும் வார்த்தைகளால் விளக்கிக் கூற இயலாத அளவிற்கு நம் மனத்தை மகிழ்ச்சியாக வைத்திருக்கும். நிலைத்த பேரின்பம் இறையருளால் கைக்கூடும்.

பித்துஎன்னை ஏற்றும் பிறப்புஅறுக்கும் பேச்சுஅரிதாம்
மத்தமே ஆக்கும் வந்துஎன் மனத்தை – அத்தன்
பெருந்துறையான், ஆட்கொண்டு பேரருளால் நோக்கும்
மருந்து இறைவாப் பேரின்பம் வந்து

இறையுணர்வு இன்றி மனதுருகும் நிலையின்றி, தன்னைமறக்கும் நிலையும் இன்றி, இறைவனைத் தொழாதவர்களைக் கண்டு அஞ்சுகிறேன் என மாணிக்கவாசகர் உரைக்கின்றார். இறையுணர்வு என்பது அன்பைப் பெருக்கும். நம்பிக்கை ஊட்டும். விடாமுயற்சிக்கும் கடினஉழைப்பிற்கும் வித்திடும். அறத்தை வளர்க்கும். இறையுணர்வு இல்லாதவர்களிடத்தே இத்தகு நற்பண்புகள் இல்லாதிருக்கலாம். நற்பண்புகள் இல்லையெனில் நற்செயல்கள் இல்லாது போகும். இதன் காரணமாக இறையுணர்வும் இறைவனைத் தொழும் பண்பும் இல்லாதவரைக்கண்டு மாணிக்கவாசகர் அஞ்சியிருக்கக்கூடும் என்பது தெளிவாகின்றது. இறையுணர்வு நம் உள்ளத்திலே நீங்காதிருந்தால் நாம் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை. மாணிக்கவாசகர் அச்சப்பத்திலே இதனைத் தெளிவுபடுத்துகின்றார். புற்றில் வாழும் பாம்பு, பொய்யர்கள் கூறும் பொய்புகுந்த மெய், ஆசை, வினைகடல், வேட்டையாடப் பயனாகும் வேல், வளைக்கையர் கடைக்கண், கிளிபோன்றவர்கள் பேசும் ஆசை வார்த்தைகள், அவர்களின் பொய்யான சிரிப்பு புன்முறுவல், நோய்கள், பிறப்பு இறப்பு, நெருப்பு, உருண்டுவரும் பாறை, நீங்காப் பழி, சாதல், சினம் கொண்ட

யானை, இடி, கைவிடும் மன்னரோடு உறவு, நெருப்புப் போன்ற கண்களை உடைய புலி, கொலைத்தன்மையுடைய அம்பு, எமனின் கோபம் இவற்றுக்கெல்லாம் நான் பயப்படமாட்டேன் என மாணிக்கவாசகர் தெளிவுபடுத்துகின்றார். இறையுணர்வும் இறைவழிபாடும் மேலே சொன்னவைகளால் ஏற்படும் துன்பங்களிலிருந்து காக்கும். எனவே தான் இறைவழிபாட்டினைப் பன்னிரு திருமுறைகள் அனைத்தும் வலியுறுத்திச் சொல்லியிருக்கின்றன. மாணிக்கவாசகர் அஞ்சாவரிகள் கீழே தரப்பட்டுள்ளன.

புற்றில்வாள் அரவும் அஞ்சேன்
பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்
வெருவரேன், வேட்கை வந்தால்
வினைக்கடல் கொளினும் அஞ்சேன்

வன்புலால் வேலும் அஞ்சேன்
வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்
கிளிஅனார் கிளவி அஞ்சேன்
அவர் கிறி முறுவல் அஞ்சேன்

பிணிஎலாம் வரினும் அஞ்சேன்
பிறப்பினோடு இறப்பும் அஞ்சேன்
வாள்உலாம் எரியும் அஞ்சேன்
வரைபுரண்டு இடினும் அஞ்சேன்

தகைவுஇலாப் பழியும் அஞ்சேன்
சாதலை முன்னம் அஞ்சேன்
தறிசெறி களிறும் அஞ்சேன்
தழல்விழி உழுவை அஞ்சேன்

மஞ்சுலாம் உருமும் அஞ்சேன்
மன்னரோடு உறவும் அஞ்சேன்
கோள்இலா வளி அஞ்சேன்
கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்

இறையுணர்வு நல்வாழ்விற்கான வழிகளை உணர்த்தும். மனிதர்களின் மனத்தைப் பண்படுத்தும். நல்வினைகளை உணர்த்தித் தீவினைகளை நீக்கும். தீதிலா நன்மை தரும். பிறரை வாழவைக்கின்ற வாழ்வை நமக்குத் தரும். விருப்பு வெறுப்பு இல்லாத மனநிலையைத் தரும். வையத்துள் வாழ்வாங்கு வாழும் வழியைக் காட்டும் இறை உணர்வும் சிந்தனையும் வழிபாடும் நம்வாழ்வில் நித்தமும் சூழ்ந்திருக்க வேண்டுவோமாக.

*சிவாய நம*

*திருச்சிற்றம்பலம்*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

இறைவன் குருவாகி வந்து என்னை ஆட்கொண்டமையால் என்னுடைய பழவினைகள் நீங்கின. உடலாகிய கோட்டையின் உள்ளிருந்த குறைகள் அழிந்தன. இனிப்பிறவி வாராமல் தடுத்தாட் கொண்டான். அதனால் என்னுடைய ஓங்காரமாகிய மாயா மலம் கெட்டது. என்னிடம் உள்ள அனைத்துக் குற்றங்களும் நீங்கின. எல்லாவற்றிற்கும் இடமாகிய உடம்பு முதலாக அனைத்தும் வெந்து போயின. மனத்திற்கு இரையான இன்னல்களை எல்லாம் இல்லாமல் நீக்கினான். நான் முற்பிறவியில் செய்த தீவினைகள் அனைத்தும் இல்லாது போகச் செய்தான். நான் யார்? என்பதை அறிய வைத்தான். அதனால் நான் தனி ஒருத்தி ஆனேன்.

**ஓங்காரம் கெட்டதடி! உள்ளதெலாம் போச்சுதடி!**
**ஆங்காரம் கெட்டதடி! அடியோடு அறுத்தாண்டி!**
**தரையாம் குடிலைமுதல் தட்டுருவம் வெந்ததடி!**
**இரையாம் மனத்து இடும்பைஎல்லாம் அறுத்தாண்டி!**
**முன்னை வினையெல்லாம் முழுதும் அறுத்தாண்டி!**
**தன்னை அறியவே தான்ஒருத்தி ஆனேண்டி!**

என்னை நான் அறிந்து கொண்டமையால் நல்வினை தீவினை ஆகிய இருவினைகளையும் நீக்கி என்னை நானே அறிந்து கொள்ளக் காரணமான தவம் பற்றிய நிலையை எனக்கு உரைத்தான். என் உடலாகிய வீட்டில் உள்ள தெலாம் நீங்கினமையால் மனம் வெட்ட

வெளியானது. நான் கண்ட காட்சிக ளெல்லாம் காட்டுக்குள் ஒளிதரும் நிலவு போலப் பயனற்றுப் போயின.

**என்னையே நான்அறிய இருவினையும் ஈடழித்துத்**
**தன்னை அறியத் தவம்எனக்குச் சொன்னாண்டி!**
**வீட்டிவ் ஒருவரிலை வெட்டவெளி ஆனேண்டி!**
**காட்டுக்கு எரித்தநிலா கனவாச்சே கண்டதெல்லாம்**

இவ்வாறு பயனற்ற நிலையில் உள்ள என்னைக் கண்டவர்கள் சிரிக்க மாட்டார்களோ? நாட்டிலுள்ளோர் கேலியாகப் பாடமாட்டார்களோ? மேலும் மேலும் பகைத்துக் கொள்ள மாட்டார்களோ, ஏசி ஏளனம் செய்ய மாட்டார்களோ? மேலும் என்னுடைய நிலைமையைக் கண்டவன் எங்கும் இருப்பவன். என்னுடைய கன்னித் தன்மையைக் குலைத்து விட்டான். கற்பையும் கெடுத்து விட்டான். கற்பைக் குலைத்த நிலையையும் கருவேருடன் நீக்கியமையும் என் அழகைக் குலைத்தமையும் அதனால் அறிவை நான் இழந்தமையும் கண்டு எனக்கு என்ன வினை வருமோ? என்பதை நான் அறியேன். அவன் சொன்ன சொல் அனைத்தும் மாறுபாடு இன்றிப் பலித்து விட்டது.

**நகையாரோ கண்டவர்கள் நாட்டுக்குப் பாட்டலவோ?**
**பகையாரோ கண்டவர்கள் பார்த்தாருக்கு ஏச்சலவோ?**
**இந்நிலைமை கண்டாண்டி! எங்கும் இருந்தாண்டி!**
**கன்னி அழித்தாண்டி! கற்பைக் குலைத்தாண்டி!**
**கற்புக் குலைந்தமையும் கருவேர் அறுத்தமையும்**
**பொற்புக் குலைத்தமையும் போதம் இழந்தமையும்**
**என்ன வினைவருமோ இன்னம் எனக்கு என்றறியேன்**
**சொன்னசொல் எல்லாம் பலித்ததடி! சோர்வறவே**

இரவும் பகலும் இல்லாத வெற்றிடத்தை எனக்குக் காட்டிக் கொடுத்தான். எனக்கு வந்த துன்பத்தை நீக்கிப் பார்த்தவனை நான் பார்த்திருந்தேன். என்னைத் தன் இனத்தில் சேர்ப்பாரோ? பெரியோர் கூறிய சாத்திரத்தில் அடங்குமோ? அவனைப் பற்றி நான் அறிந்த நிலைமையெல்லாம் உள்ளபடி நடந்து விட்டதே.

**கங்குல்பகல் அற்றிடத்தைக் காட்டிக் கொடுத்தாண்டி!**
**பங்கம் அழித்தாண்டி! பார்த்தானைப் பார்த்திருந்தேன்**

**சாதியில் கூட்டுவரோ! சாத்திரத்துக்கு உள்ளாமோ!**
**ஓதிஉணர்ந்த தெல்லாம் உள்ளபடி ஆச்சுதடி!**

எவருக்கும் தெரியாமல் நான் என்ன குற்றம் செய்தேனோ? எனை ஈன்ற அன்னை தந்தை சுற்றம் எல்லாரும் அந்தப் பூமியில் அறிய மாட்டார்களோ? கொன்றவற்றை நான் தின்றோனோ? அன்றித் தின்றவனைக் கொன்றேனோ அல்லாது உன்னை நினைக்கின்ற ஆசையை நான் மறந்தேனா? (மறக்கவில்லை)

**என்னகுற்றம் செய்தேனோ? எல்லாரும் காணாமல்**
**அன்னைசுற்றம் எல்லாம் அறியாரோ அம்புவியில்?**
**கொன்றாரைத் தின்றேனோ? தின்றாரைக் கொன்றேனோ?**
**எண்ணாத எல்லாம் எண்ணும்இச்சை மறந்தேனோ?**

என்னைத் தன் இனத்தில் சேர்ப்பாரோ? சமய வாதிகள் என் நிலைமையினைப் பற்றி நினைப்பார்களோ? மாறுபட்டு வாழ்ந்த என் நிலை மற்றவர்கள் பேசும் படியான இகழ்ச்சிக்கு இடமானதே. கண்டவர்களுக்கு நான் பெண்ணானேன். என்னைக் காணாதார் நெஞ்சில் காமப் பொருளானேன். இங்கு உண்டார்கள் என்ற தொடர் சித்தர்களைக் குறிக்கும். அவர்கள் கந்த மூலங்களை உண்பார்களே தவிர வேறு உணவினை உண்ணார்.

**சாதியிலே கூட்டுவரோ? சமயத்தோர் எண்ணுவரோ?**
**பேதித்து வாழ்ந்ததெல்லாம் பேச்சுக்கு இடமாச்சுதடி!**
**கண்டார்க்குப் பெண்ணலவோ! காணார்க்கும் காமமடி!**
**உண்டார்கள் உண்டதெலாம் ஊனல்லது உண்பர்களோ!**

உண்மையை அறிந்து கொண்டவர்கள் அவற்றைக் கருத்தில் கொள்ள மாட்டார்களோ? இறைவனைக் காணும் வழிமுறைகளைச் சொன்னவர்கள் அவனைக் கண்டவர்கள் ஆக மாட்டார். அவ்வாறு கண்டவர்கள் அதைப் பற்றிச் சொல்ல மாட்டார்கள். பழமையான வேதங்கள் இறைவனைத் துதிக்கின்றன. தொண்டு செய்யும் தொண்டர்கள் உள்ளத்தில் அவன் ஒடுங்குவான்.

**கொண்டவர்கள் கொண்டதெலாம் கொள்ளாதார்**
**கொள்ளுவரோ?**
**விண்டவர்கள் கண்டவரோ? கண்டவர்கள் விண்டவரோ?**
**பண்டாய நான்மறைகள் பாடும் பரிசலவோ?**

தொண்டாய தொண்டர் உளம் தோற்றி ஒடுங்குமதோ?

அவனைப் பற்றிச் சொல்வது எளிதான செயலன்று. ஒருவரும் உணர்வதற்கு அரிதானவன். அறிவால் அளந்தறிய இயலாத பெருமையுள்ளவன். நினைப்புக்கும் சொல்லுக்கும் அடங்காதவன். காண்பதற்கு அரியவன்; நுண்ணியன் ஆயினும் அதனைவிட நுண்ணியன். சொல்லுக்குள் அடங்காதவன். சொற்களைக் கடந்து நின்றவன். நோக்கரிய நோக்கே! நுணுக்கரிய நுண்ணுணர்வே என்பது திருவாசகம். மேலும் பாதாளம் ஏழினும்கீழ் சொற்கழிவு பாதமலர் என்றும் திருவாசகம் கூறும். மேலும் ஓத உலவா ஒரு தோழன் என்றும் திருவாசகம் கூறுகின்றது. சொல்லுக்கு அடங்காவே அவள் சூரத்தனங்கள் எல்லாம் என்பது பாரதி வாக்கு. கல்லிலும் அவன் இருக்கின்றான். கல்லுக்குள் ஒளி உள்ளது. கல்லுடன் கல்லை மோதினால் தீப்பொறி தோன்றும். எனவே கல்லுக்குள் ஒளி வடிவமாக இறைவன் இருக்கின்றான்.

ஓத எளிதோ? ஒருவர் உணர்வரிதோ?
போதம் அறஎங்கும் விளங்கும் பெருமையன்காண்
வாக்கும் மனமும் கடந்த மனோலயன்காண்
நோக்க அரியவன்காண் நுண்ணரிய நுண்ணியன்காண்
சொல்லுக்(கு) அடங்கான்காண் சொல்லிறந்து
நின்றவன்காண்!
கல்லுக்குள் இருந்தனன்காண் ஒளிபோல் நின்றவன்காண்!

இன்னதென்று கூட்டிச் சொல்ல இயலாத நிலையைக் கடந்து ஒன்றும் இல்லாப் பெருவெளியில் இருக்கும் இன்பத்தை அடைக என்று சொன்னான். நான் இவ்வாறு உலக இன்பங்களில் சிக்கி உழல்க என்று என் விதியாகிய ஏட்டில் எழுதியுள்ளானோ? இல்லை எழுதினவன் கை செய்த தவறுதானோ? என்னைச் சும்மா இருக்க வைத்த செயலை நான் அறியேன். இதே கருத்து திருப்புகழ் பாடிய அருணகிரி நாதர் இயற்றிய கந்தர் அநுபூதியிலும் வருகின்றது. பலவாறு உலகச் சிற்றின்பங்களைத் துய்த்த அருணகிரி நாதர் தொழு நோயால் துன்பமுற்று வாழ்வை வெறுத்துத் திருவண்ணாமலை அருணாசலேசரின் ஆலயத்திலுள்ள வல்லாள ராசன் கோபுரத்தில் ஏறிக் கீழே விழுந்த போது முருகப் பெருமான் அவரைக் கையில் தாங்கி

அமரச் செய்தார். முருகனின் அருட்செயலை எண்ணி மகிழ்ந்த அவர் அவனை நோக்கி, நான் என்ன செய்வது? என்று கேட்க, முருகன் அவரை நோக்கி, சும்மா இரு என்று சொனன்னார். அந்தச் சொல்லின் பொருள் யாதோ? என்று வியந்த அருணகிரி நாதர் தம் அநுபூதியில் கீழ்க்கண்ட பாடலில் கூறியது வருமாறு.

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இருசொல் அறஎன்(று) உரைத்த
அம்மா பொருளொன் றும்நான் அறிந்திலனே
சூட்டிறந்த பாழ்அதனில் சுகித்திருக்கச் சொன்னவன்காண்!
ஏட்டின் எழுத்தோ? எழுதினவன் கைப்பிழையோ?
சும்மா இருக்கவைத்தான் சூத்திரத்தை நான் அறியேன்
அம்மா பொருள்இதுஎன அடைய விழுங்கினண்டி!

நான் பார்த்த இடங்கள் எல்லாம் பரம்பொருளின் தோற்றமே. அதனால் உண்டான நிலைமையால் என் நிலை குலைந்த தன்மையை நான் அறியேன் இறைவனைத் திருமுழுக்காட்டி, மலர்களைச் சாத்தாமல் என் எண்ணத்தை வீணாக்கி விட்டேனே.

பார்த்த இடம்எல்லாம் பரமாகக் கண்டேண்டி!
கோத்த நிலைகுலைந்த கொள்கை அறியேண்டி!
மஞ்சனம் ஆட்டி மலர்பறித்துச் சாத்தாமல்
நெஞ்சுவெறும் பாழானேன் நின்றநிலை காணேண்டி!

நான் பலவாறு அவன் புகழைப் பாடியும் அவ்வாறு பிறர் எழுதிய பாடலைப் படித்திருந்தும் அவனை நாடி ஓடாமல் என் உருவம் கெட்டேன். மாணிக்கத்தை விட்டு அதன் ஒளி நீங்காத தன்மை போல அவனைச் சேர்த்து இருந்தேன். அவன் பேச இயலாப் பெருமை உடையவன்.

பாடிப் படித்திருந்தும் பன்மலர்கள் சாத்தாமல்
ஓடித் திரியாமல் உருக்கெட்டு விட்டேண்டி!
மாணிக்கம் அல்ஒளிபோல் மருவி இருந்தேண்டி!
பேணித் தொழும்அடியார் பேசாப் பெருமையன்காண்!

அன்று முதல் இன்றுவரை நான் இருந்த பருவத்தில் அனைவருக்கும் பொதுவாய் இருந்த மிகவும் அழகிய தோற்றம்

உடையவன். என்னுடைய அறிவுக் குறைபாட்டினால் ஒளி மயமான அவனைக் காணாது என் புத்தியும் ஐம்பொறிகளும் போன வழியில் நான் சென்றேன். அதனால் அறிவு அழிந்து வீணாகிப் போனேன். எனக்கு ஏற்ற இடம் எதுவோ? அங்கே நான் தூங்கிக் காலம் கழித்தேன்.

**அன்றுமுதல் இன்றளவும் அறியாப் பருவமதில்**
**என்றும் பொதுவாய் இருந்த நிராமயன்காண்!**
**சித்த விகாரத்தால் சின்மயனைக் காணாமல்**
**புத்தி கலங்கிப் புகுந்தேன் பொறிவழியே**
**புத்தி அறியாமல் பாழில் கவிழ்ந்தேண்டி!**
**ஒத்தஇடம் நித்திரை என்றும் ஒத்தும் இருந்தேண்டி!**

நான் உயிரோடு இருந்தும் செத்தாரைப் போல ஆனேன். இப்பொழுது சிந்தை தெளிந்து விட்டது. எனக்கு யாரும் துணையில்லை. வேறு மாற்றம் எனக்கு இல்லை. கல்வியாலோ! கேள்வி ஞானத்தாலோ! நான் அறிய இயலாத அளவற்ற ஆற்றலே எங்கும் நிறைந்துள்ளது.

**செத்தாரை ஒத்தேண்டி! சிந்தை தெளிந்தேண்டி!**
**மற்றாரும் இல்லையடி! மறுமாற்றம் காணேண்டி!**
**கல்வியல்ல கேள்வியல்ல கைகாட்டும் காரணம்தான்**
**எல்லைஅள(வு) அற்றதடி! எங்கும் நிறைந்ததடி!**

நான் ஆசைப்பட்டுக் கூறும் சொற்களை நாடி வந்தவன். எந்த விதமான குறைபாடும் இல்லாதவன். அறிவுக்கு அறிவானவன். பத்துத் திசைகளுக்கும் இடங்காதவன். எல்லாத் திசைகளிலும் பரந்து தான் தனியாக இருக்கின்றவன்; தான் தனியன் காணேடி ஏகன் அநேகன் என்பது திருவாசகம்.

**வாசா மகோதரத்தை மருவிடம் கொண்டாண்டி!**
**ஆகூசம் இல்லாண்டி! அறிவுக்கு அறிவாண்டி!**
**பத்துத் திசைக்கும் அடங்காப் பருவமடி!**
**எத்திசைக்கும் எங்கும் இடைவிடாத ஏகமடி!**

அவனைப் பற்றிச் சிந்தித்தால் அது இனிதாகத் தித்திக்கும். அவனைப் பற்றி எண்ணுவார் மனத்தில், அதாவது அவர்களது பக்திக் கடலுள் நிலைத்திருக்கும் பரஞ்சோதி உள்ளத்தின் அறிவால் எண்ணுவார் உணர்வுக்கு உணர்வானவன். உள்ளத்தில் அவன் இருந்தானேயானால் கொஞ்சமும் குறைய மாட்டான்.

**தித்திக்க ஊறுமடி! சித்தம் உடையார்க்கும்**
**பத்திக் கடலுள் பதித்தபரஞ் சோதியடி!**
**உள்ளுணர்வால் நின்றவர்நம் உணர்வுக்கு உணர்வாண்டி!**
**எள்ளளவும் உள்ளத்தில் ஏறிக் குறையாண்டி!**

முடிவும், முதலும் இல்லாதவன். பிறப்பு, இறப்பு இல்லாதவன். யாராலும் காண இயலாது எங்கும் நிறைந்திருப்பவன். அனைத்து அண்டங்களிலும் (ஆயிரத்தெட்டு அண்டங்கள் என்பது கந்த புராணம்) இருக்கின்ற அனைவரும் அவனை நினைத்தாலும் அணுவளவும் குறைய மாட்டான்.

**தூரும் தலையும்இலான் தோற்றம் ஒடுக்கம்இலான்**
**ஆரும் அறியாமல் அகண்டமாய் நின்றாண்டி!**
**எத்தனையோ அண்டத்(து) இருந்தவர்கள் எத்தனைபேர்**
**அத்தனைபேர் உண்டாலும் அணுவும் குறையாண்டி!**

*(தொடரும்...)*

## பட்டினத்தார் பைந்தமிழ் - 16

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

ஞானத் தபோதனராகிய பட்டினத்தார் திருவிடை மருதூரில் வீற்றிருக்கும் மாணிக்கத் தீங்கனியாம் இறைவனை அனுபவிக்கும் தொடர்ச்சியில் தாம் பாடிய மும்மணிக் கோவையில் ஞான நாட்டம் பெற்றபின் யானும் கண்டேன் என்கிறார். பக்குவப்பட்ட பட்டினத்தார் போலப் பிறர் காண முடியாததால் தான் நின்னைக்காணா மாந்தர், தன்னையும் காணாத் தன்மையர் என்றனர். இதற்கான காரணம் யாதெனில் ஆன்மாவுக்கே உரிய ஆணவமல மறைப்பே ஆகும்.

இந்த ஆணவமல மறைப்பு உள்வழி ஆன்மாவால் எதையும் அறிய முடியாது. குறிப்பாகக் கண்ணுக் கெதிரே உள்ளதாயினும் அறியாத அறியாமை உடையதுதான் ஆன்மாவின் இலக்கணமாகும். இதனைப் பட்டினத்தார் பாவிகள் தமதே பாவம் என்பதாக இடித்துரைத்தார்.

எல்லாம் விரிந்து பரந்த உலகில் அனுபவிக்கத் தெரியாத ஆன்மா - பாவாத்மா என்பதாகப் பட்டினத்தார் கூறுகிறார். பட்டினத்தாரின் அனுபவம் என்பது உலகியலுக்கு மேலான மெய்யான அனுபவத்தைக்

குறிப்பதாகும். இந்த உண்மையை உலகியல் சார்ந்த உவமைவழிச்சுட்டி ஆன்மாவைப் பக்குவப் படுத்துகிறார்.

உவமை என்பது அறிந்து தெளிய வேண்டிய ஒன்றைச் சொல்லும் திறத்தால் கூறக் கேட்கும் போது ஏற்படும் மகிழ்ச்சிக்கு உவமை என்று பெயர். உவ- என்பது மகிழ்ச்சி. மை - என்பது தொழிற் பெயர் விகுதியாய் மகிழ்ச்சியைச் செய்வது எதுவோ அது உவமை எனப்படும். இந்த வகையில் பட்டினத்தார் அனுபவிக்கத் தெரியாத ஆன்மாவின் அவலத்திற்குக்கீழ் வருமாறு மூன்று உவமைகளைக் கூறுகிறார்.

1. முறியாப் புழுக்கல் முப்பழம் கலந்த அறுசுவை அடிசில் அட்டு இனி திருப்ப, புசியாது ஒருவன் பசியால் வருந்துதல் அயினியின் குற்றம் அன்று,

2. வெயிலின் வைத்து ஆற்றிய தெண்ணீர் நாற்ற மிட்டிருப்ப மடாஅ ஒருவன் விடாஅ வேட்கை தெண்ணீர் குற்றம் அன்று,

3. கண் அகன்று தேன்துளி சிதறிப் பூந்துணர் துறுமி வாலுகம் கிடந்த சோலை கிடப்ப வெள்ளிடை வெயிலில் புள்ளிவெயர் பொடிப்ப அடிபெயர்த் திடுவான் ஒருவன் நெடிது வருந்துதல் நிழல் தீங்கு அன்றே!

முனைமுறியா உயர்ரக அரிசியால் சமைக்கப்பட்ட சோற்றுடன் வாழை, மா, பலா எனும் முக்கனியும் கலந்து அறு சுவையுடன் கூடிய உணவு சமைத்திருக்க அதனை உண்ண வேண்டிய ஒருவன் அதனை உண்டு தன்பசியைப் போக்கிக் கொள்ளாதது அவ்வுணவின் குற்றமன்று. உண்ணாதவனின் குற்றம். இங்ஙனம் உண்ணாதது அவனின் கொடுத்து வைக்காத வினைப்பயன் ஆகும்.

வெயிலிடை வைத்துக் குளிரும்படிச் செய்த தெளிந்த தண்ணீரால் தாகமுடைய ஒருவன் தன் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளாதது அவனது குற்றமாகும்.

அவ்வாறே தேன் சிந்தும் மலர்ச்சோலை இருக்க அதன் நிழலில் வந்து தங்காதது கொடிய வெயிலில் வியர்வை சிந்த நடந்து வந்தவனின் குற்றமன்றி நிழலின் குற்றமன்று.

இம் மூன்று உவமைகளும் ஒரே கருத்தையே உணர்த்தின. அவை யவைகளும் பிறர்க்கு நன்மை செய்யத் தயாராக இருந்தும் அவற்றின் நன்மையை அறியாத மாந்தர்கள் உள்ளனரே என்ற கருத்து -

இறைவன் ஆன்மாக்களுக்கு அருள உள்ள போது அந்த அருளார் அமுதத்தைப் பெற்றுய்ய ஆன்மாக்கள் விரும்பாமல் அறியாமையில் மயங்கிக்கிடக்கிறனவே எனப் பட்டினத்தார் ஆன்மாக்கள் பொருட்டு வருந்தினார் என்பது கருத்து.

குறிப்பாக இவற்றையே வேறு வகையாகக் கூறினால், ஒருவர் பள்ளிக்குச் சென்று படித்தறியாதது அவரது குற்றமே யன்றிப் பள்ளியின் குற்ற மன்று என்பது போல ஒல்லும் வகையான் முயன்று ஓவா உழைப்பால் உழைத்து உண்டு வாழாமல் வறுமையில் உழன்று அல்லல் உறுவது சோம்பேறிகளின் குற்றமேயன்றி உழைப்புக்கான தன்மையின் குற்றமன்று எனலாம், இதைத்தான் பட்டினத்தார்

*உழப்பின் வாரா உறுதிகள் உளவோ*
*கழப்பின் வாராக் கையற வுளவோ*

என்றார். உழைப்பு என்பது விடா முயற்சி; அம் முயற்சி நினைப்பு, சொல், செயல் என்ற மூன்று வகையாலும் அமையும் முயற்சியைக் குறிக்கும். தண்மையான அம்முயற்சியால் அடையப் பெறாத பேறுகள் ஏதும் உண்டோ? ஏதும் இல்லை என்பதால் எல்லாம் அடையப் பெறும் என்பது கருத்து.

கழப்பு என்பது சோம்பல்; முயற்சியின்றிக் காலத்தைப் போக்கும் சோம்பலான தீமையால் வாராத துன்பம் இல்லை, எல்லாத் துன்பமும் வரும் என்றதால் ஆன்மா தானே முயன்று ஆண்டவனை அனுபவிக்க முந்த வேண்டும் எனும் போது மும்மணிக் கோவையின் அடுத்த ஒருபாடலில் பட்டினத்தார் அலைந்து திரியும் ஆன்மாவுக்கு ஓர் அமைதி கூறுகிறார்.

*என்றும், ஒருதனையே நோக்குவார் உள்ளத்*
*திருக்கும் மருதனையே நோக்கி வரும்*

எக்காலத்தும் ஒப்பற்ற ஒரு தனிப்பெரும் பொருளாய் உள்ள இறைவனை மனக் கண்கொண்டு பார்த்தால் மருத வாணன் தெரிவான் என்கிறார்.

அங்ஙனம் நோக்கப்படுகின்ற மருதவாணர், மன்மதனை அழித்தவர், கயிலையை எடுத்த இராவணனைத்தன் கால் பெருவிரலால் அருத்தித் துன்பந்தந்தவர், தக்கன் வேள்வியின் போது

தன் அம்சமான வீரபத்திரரைத் தோற்றுவித்து அனைவரையும் சங்காரம் செய்தவர். சலந்தரா சூரனை அழித்தவர் என்றெல்லாம் புகழக் கூடியவராகப் பட்டினத்தார் சிவபெருமானை மருதவாணர் மூலமாக அனுபவிக்கின்றார்.

இத்தகு மருதவாணரைத் தவம்புரி வோரும் இல்லறத்தாரும் வணங்கும் போது அவரவர்க்கேற்ப வணங்கும் பலனை அடைவர் என்கிறார் பட்டினத்தார். இந்த இருவேறு நிலையினர் வணங்கிப் பலன்பெறு தலை ஓர் உவமையால் விளக்குகையில்,

*வல்லான் ஒருவன் கைம்முயன் றெறியினும்*
*மாட்டான் ஒருவன் வாளா எறியினும்*
*நிலத்தின் வழாஅக்கல் லேபோல்*
*நலத்தின் வழார்நின் நாமம் நவின்றோரே!*

என்றார்.

வலிமையுள்ள ஒருவன் மிகுந்த முயற்சியுடன் வானத்தில் கல்லை விட்டெறிந்தால் அது வான மண்டலத்திலேயே இருக்காமல் நிலத்தில் தான் வந்து விழும்.

அவ்வாறே வலிமை யில்லாத எளியவன் ஒருவன் வானத்தில் கல்லை எறிந்தாலும் நிலத்தில் தான் வந்து விழுமேயன்றி வானத்திலேயே இருந்துவிடாது.

எனவே துறவாகத் தவவாழ்வு செய்தால்தான் இறையருள் உண்டு என்பதாக இல்லாமல் எளிய இல்லறத்தார்க்கும் பலன் உண்டு என்பதையே எறியப்படும் கல்லின் முயற்சியும் தூரமும் கொண்டு கணக்கிடாமல் நிலத்தில் விழுவதான ஒன்றையே கருதுமாறு போல நெஞ்சில் குடிகொள்ளும் மருதவாணர் அவரவர்க்குமாக அருள் செய்யும் போது சமமாகவே செய்வர் என்பதைப் பட்டினத்தார் எளிய உதாரணத்தால் உணர்த்தினார்.

அடுத்து மருதவாணரிடம் பட்டினத்தார் வேண்டுவதாக அமையும் 22 ஆம் பாடல் அதிஅற்புதமானதாகும்.

*இமையா நாட்டத்து என்தனி நாயக!*
*அடியேன் உறுகுறை முனியாது கேண்மதி!*

என்கிறார். முனியாது என்பது வெறுக்காமல் என்பது பொருள். இது இறைவனிடம் கொண்ட உரிமை.

மருத மாணிக்க உமையாள் கொழுநனே நீ, தானே ஆகிய தற்பரன்; தோற்றுவதெல்லாம் தன்னிடைத் தோற்றுவித்து நீ எதிலும் தோன்றாத சுயம்பாய் உள்ளாய். ஆதலால் உன்னிடம் வேண்டினால் எனக்குப் பலன் கிட்டும். ஆதலால் என் குறையை முனியாதுகேள் என்றார். நானோ வெறுக்கத்தகுந்த வாழ்க்கையை உடையவனாக உள்ளதால் என்னை வெறுக்காமல் கூறுவதை மறுக்காமல் கேட்டு அருள்புரிவாய் என்கிறார். பெருமானே! என்னை

*பாவப் பகுதியில் இட்டுக் காவல்*
*கொடியோர் ஐவரையேவி நெடிய*
*ஆசைத் தளையில் என்னையும் உடலையும்*
*பாசப் படுத்திப் பையென விட்ட பின்*
*யானும் போந்து தீதினுக்கு உழன்றும்*
*பெரியோர்ப் பிழைத்தும் பிறர்பொருள் வவ்வியும்*
*வேற்றோர் மனைவியர் தோற்றம் புகழ்ந்தும்*
*பொய்பல கூறியும் புல்லினம் புல்லியும்*
*இட்டுழி இடாது பட்டுழிப் படாஅது*
*இந்நாள் இடுக்கண் எய்திப் பன்னாள்*
*வாடுபு கிடப்பேன்! வீடுநெறி காணேன்!*
*நின்னை அடைந்த அடியார் அடியார்க்கு*
*என்னையும் அடிமை யாகக் கொண்டே*
*இச்சிறை பிழைப்பித்து இனிச்சிறை புகாமல்*
*காத்தருள் செய்ய வேண்டும்!*
*தீத்திரண் டன்ன செஞ்சடை யோனே! (22)*

பட்டினத்தாரின் இந்த வேண்டுதல் அவருக்காகக் கேட்டுக் கொண்டதன்று. உலகியலார் பொருட்டு உலகியலார் சார்பில் வேண்டியதாகும். ஏனெனில் பட்டினத்தாரைப் போல முற்றுந்துறந்தாரில்லை என்பர். அத்தகைய துறவி வேற்றோர் மனைவியர் தோற்றம் புகழ்ந்து எனக் கூறமாட்டார்; ஆதலின், நாட்டில் உள்ள அழும்புகளையும் அவலங்களையும் தம்மேல் ஏறிட்டுக் கொண்டு பாடினார். என்பதே உண்மை.

பிறந்த உயிர், முத்திப் பேறாம் பிறவி அறுத்தலையே நோக்கமாகக் கொண்டதால் பட்டினத்தார் இச்சிறை பிழைப்பித்து இனிச் சிறை புகாமல் காத்தருள் என நம்பொருட்டு வேண்டினார்.

இப்பிறவி அறுப்பதற்கான உபாயத்தை அடுத்துப் பட்டினத்தார் ஒருசில அடியார்களைக் கொண்டு அடையாளப்படுத்திக் கூறுவதை அடுத்துக் காண்போமாக!

## மடாலய நிகழ்வுகள்

29.05.2018 அன்று தெய்வத்திரு நாச்சியப்ப சுவாமிகளின் 96ஆவது பிறந்த நாள் விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது. ஆன்மீகச் செல்வர் அபிராமி இராமநாதன் அவர்கள் வருகை புரிந்து சிறப்புரை ஆற்றினார். காப்பியக் கவிஞர். நா.மீனவன் வரவேற்புரை நிகழ்த்தினார். சீர்வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுரை வழங்கினார்கள். பேராசிரியர். ம. கார்மேகம் நன்றியுரை நவில விழா இனிதே நிறைவுற்றது.

### முத்துராமலிங்க ஆண்டவர் பள்ளியில் சிலைகள் திறப்புவிழா

கோவிலூரில் உள்ள முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் மற்றும் தொடக்கப்பள்ளியில் சரஸ்வதி மற்றும் நாச்சியப்ப சுவாமிகள் சிலைகள் திறப்பு விழா நடைபெற்றது. பள்ளித்தலைமை ஆசிரியை திருமதி. மணிமொழி முருகன் வரவேற்றார். காரைக்குடி மீனாட்சி பெண்கள் மேல்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியை புவனேஸ்வரி தலைமை உரையாற்றினார். எஸ்.எம்.எஸ். ஆண்கள் மேல்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் வள்ளியப்பன் நாச்சியப்ப சுவாமிகள் சிலையையும், மதுரை அல்ட்ராபெஸ்ட் பல் அறிவியல் கல்லூரி முதல்வர் விஜயலட்சுமி கலைமகள் சிலையையும் திறந்து வைத்தனர். முன்னிலை வகித்த கோவிலூர் ஆதீனம் பேசுகையில் இப்பள்ளி 1995ஆம் ஆண்டு நாச்சியப்ப சுவாமிகள் பட்டம் ஏற்ற ஆண்டு ஒரு மாணவியுடன் தொடங்கப்பெற்றது. அன்று நாச்சியப்ப சுவாமிகள் ஏற்றிய விளக்கால் இன்று 3000 மாணவர்கள் கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களில் கல்வி கற்று வருகின்றனர். 300 ஆசிரியர் அலுவலர்கள் பணிபுரிகின்றனர். அவரைப் போற்றும் வகையில் நாச்சியப்ப சுவாமிகள் சிலை வைக்கப்பெற்றுள்ளது என்றார். மேலும் இவ்விழாவில் இப்பள்ளியின் முதல் மாணவி திருநெல்லையும், பள்ளியின் முதல் தலைமை ஆசிரியர் முத்துசண்முகமும் பங்கு பெற்றிருப்பது பெரும் சிறப்பு என்றார். கோவிலூர் மடாலயம் கல்விச்

சேவையோடு மருத்துவ சேவையும் செய்து வருகிறது என்றார். தற்பொழுது ஒரு டிஸ்பென்சரியும் கோவிலூர் கண் மருத்துவமனையும் செயல்பட்டு வருகின்றன. விரைவில் பல் மருத்துவமனை ஒன்றும் தொடங்கப்பட உள்ளதாகக் கோவிலூர் ஆதினம் கூறினார். ஆசிரியை கௌரி நன்றி கூறினார்.

இவ்விழாவில் கோவிலூர் மடாலய அறநிலை உறுப்பினர் ராமனாதன், டாக்டர். அய்க்கண், நா. மீனவன், டாக்டர். நா.வள்ளி, மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் மற்றும் மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள் கலந்து கொண்டனர்.

**கோவிலூர் கண் மருத்துவமனையில் புதிய பிரிவுகள் தொடக்கம் :**

01.06.2018 அன்று ஏழை எளிய மக்கள் பயன்பெறும் வகையில் கோவிலூர் கண் மருத்துவமனையைக் காணல் அறக்கட்டளை நடத்தி வருகின்றது. முதலில் கண் பரிசோதனையுடன் தொடங்கப்பெற்ற இம்மருத்துவமனையில் படிப்படியாகப் பல புதிய பிரிவுகள் தொடங்கப்பெற்றன. கண் அறுவைச்சிகிச்சைப் பிரிவு, லேசர் சிகிச்சைப் பிரிவு, லென்ஸ் சிகிச்சைப் பிரிவுகள் தொடங்கி நடைபெற்று வருகின்றன.

தற்பொழுது விழித்திரை கிசிச்சை பிரிவு தொடக்க விழா திருமதி. விசாலாட்சி ராமசாமி தலைமையில் நடைபெற்றது. காணல் அறக்கட்டளையின் இணை நிர்வாக இயக்குனர் பி.எல்.கே. பழனியப்பன் வரவேற்றார். சிவகங்கை மாவட்ட ஆட்சித் தலைவர் லதா ஐ.ஏ.எஸ், சிவகங்கை மாவட்ட காவல்துறைக் கண்காணிப்பாளர் ஜெயச்சந்திரன் ஐ.பி.எஸ். ஆகியோர் புதிய மருத்துவப்பிரிவினையும், நவீன கருவிகளையும் தொடங்கி வைத்தார். காணல் அறக்கட்டளை நிர்வாக இயக்குநர் டாக்டர். கிருஷ்ணன் பேசுகையில் கண் மருத்துவ சோதனை மற்றும் அறுவைச் சிகிச்சைப் பிரிவில் அதிக நோயாளிகள் பயனடைந்து வருகின்றனர். கண் வங்கி தொடங்குதல், பார்வைக்குறைவுள்ள குழந்தைகளுக்கு மறுவாழ்வு மையம் அமைத்தல் மற்றும் கருவிலிருந்து இறுதி வரை எனும் திட்டங்கள் செயல்படுத்தப்பட உள்ளன. இத்திட்டத்தின் கீழ்க் கோவிலூரைச் சுற்றி

600 கி.மீ தொலைவில் உள்ள 250 கிராமங்கள் தேர்வு செய்யப்பெற்று 15 மையங்கள் மூலம் இணைக்கப்பட்டு கருவில் உள்ள குழந்தைகள் சோதனை செய்யப்பெற்று இறுதிக்காலம் வரை சோதனை ஆலோசனைகள் வழங்கப்பட உள்ளது என்றார். மாவட்ட ஆட்சித்தலைவர் லதா பேசுகையில் கோவிலூர் கண் மருத்துவமனை ஏழை எளிய மக்களுக்குச் சிறப்பாகச் சிகிச்சை அளித்து வருவது பாராட்டுக்குரியது. புதிதாகத் தொடங்கப்பெற்றுள்ள விழித்திரை சிகிச்சைப் பிரிவில் உலகத்தரத்தில் நவீன கருவிகளுடன் தொடங்கப்பட்டுள்ளன. இவை இப்பகுதி மக்கள் மேலும் பயன்பெற உதவும். இம்மருத்துவமனைக்கு வேண்டிய உதவிகளை மாவட்ட நிர்வாகம் செய்யும் என்றார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் பேசுகையில் கோவிலூர் கண் மருத்துவமனையை விரிவுபடுத்த ஒரு ஏக்கர் நிலத்தினைக் காணல் அறக்கட்டளைக்குக் கோவிலூர் மடாலயம் இலவசமாக வழங்க உள்ளது என்றார். விரைவில் பல் மருத்துவமனை ஒன்றினைக் கோவிலூர் மடாலயம் திறக்க உள்ளது என்றார். முன்னாள் மத்திய இணை அமைச்சர் சுதர்சன் நாச்சியப்பன் வாழ்த்துரை வழங்கினார், மருத்துவர்கள் ஜெயவேல், காசிநாதன், ஹேமலதா ஆகியோர் கௌரவிக்கப்பெற்றனர். அறக்கட்டளைப் பொருளாளர் ரங்கநாதன் நன்றி கூறினார். பிள்ளையார்பட்டி பிச்சைக்குருக்கள், குழந்தைக்கவிஞர் செல்லக்கணபதி, கோவிலூர் மடாலய கல்வி நிறுவனங்களின்; ஆலோசகர், டாக்டர். குமரப்பன், அ.மு.க. ரங்கநாதன் செட்டியார், சக்தி திருநாவுக்கரசு, பி.ஆர். சொக்கலிங்கம், எஸ்.எல்.என். பெரியணன், வக்கீல் பழனியப்பன், சாமி திராவிடமணி, அரிமா கண்ணப்பன், ஏ. ராமநாதன், ஜமீன்தார் ராமகிருஷ்ணன், கோவிலூர் ஊராட்சிமன்ற முன்னாள் தலைவர் டி.ஆர்.எம். அழகப்பன், எஸ்.எஸ். சுப்பிரமணியன் மற்றும் கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் கலந்து கொண்டனர். நிகழ்ச்சிகளைப் பேரா. கலா தொகுத்து வழங்கினார்.

13.06.2018 அன்று நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி முதலாண்டு வகுப்புகள் தொடக்க விழா நிகழ்ந்தது.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### இன்னா செய்யாமை

(தீங்கு செய்யாதிருத்தல்)

**1. சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்கு இன்னா**
**செய்யாமை மாசற்றார் கோள்.**

சிறப்பு ஈனும் – சிறப்பினைத் தருகின்ற; செல்வம் பெறினும் – செல்வத்தைப் பெறுவதாக இருந்தாலும்; பிறர்க்கு இன்னா – பிறருக்குத் தீங்கு; செய்யாமை – செய்யாதிருத்தல்; மாசற்றார் கோள் – மனத்தூய்மை உள்ளவர்களின் கொள்கையாகும்.

சிறப்பினைத் தருகின்ற செல்வத்தைப் பெறுவதாக இருந்தாலும் பிறருக்குத் தீங்கு செய்யாதிருத்தலே மனத் தூய்மை உள்ளவர்களின் கொள்கையாகும்.

**2. கறுத்துஇன்னா செய்தஅக் கண்ணும் மறுத்துஇன்னா**
**செய்யாமை மாசுஅற்றார் கோள்.**

கறுத்து – கோபம் கொண்டு; இன்னா செய்த – தீங்கு செய்த; அக்கண்ணும் – அந்தப் பொழுதிலும்; மறுத்து இன்னா – அதற்கு மாற்றாகத் தீங்கு; செய்யாமை – செய்யாதிருத்தலே; மாசற்றார் கோள் – மனத் தூய்மை உள்ளவர்களின் கொள்கையாகும்.

கோபம் கொண்டு ஒருவர் தமக்குத் தீங்கு செய்த போதும் அதற்கு மாற்றாகத் தீங்கு செய்யாதிருத்தலே மனத்தூய்மை உள்ளவர்களின் கொள்கையாகும்.

**3. செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்**
**உய்யா விழுமம் தரும்.**

செய்யாமல் – பிறர்க்குத் துன்பம் செய்யாத போதும்; செற்றார்க்கும் – தன்மேல் சினம் கொண்டார்க்கும்; இன்னாத செய்தபின் – தீங்குகள் செய்த பின்னர்; உய்யா விழுமம் தரும் – நீக்கமுடியாத துன்பத்தை அது தரும்.

தான் பிறர்க்குத் தீங்கு செய்யாத போதும் ஒருவர் தன்மேல் சினம் கொண்டால் அதற்காகத் தீங்கு செய்தால் அத்தீங்கு நீக்கமுடியாத துன்பத்தைத் தரும்.

**4. இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண**
**நன்னயம் செய்து விடல்.**

இன்னா செய்தாரை - தமக்குத் தீங்கு செய்தவரை; ஒறுத்தல் - தண்டித்தல்; அவர்நாண - தீங்கு செய்தவர் வெட்கப்படும் படியாக; நன்னயம் - இனிய நன்மைகளை; செய்துவிடல் - செய்தலாகும்.

தமக்குத் தீங்கு செய்தவரைத் தண்டித்தல் என்பது தீங்கு செய்தவர் வெட்கப்படும்படியாக அவருக்கு இனிய நன்மைகளைச் செய்தலாகும்.

**5. அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்**
**தம்நோய்போல் போற்றாக் கடை.**

அறிவினான் ஆகுவது உண்டோ - ஒருவர் பெற்ற அறிவினால் ஆகும் பயன் ஏதேனும் உண்டா? பிறிதின் நோய் - பிறிதோர் உயிருடைய துன்பத்தை; தம் நோய் போல் - தம்முடைய நோய்போல; போற்றாக்கடை - காக்காத போது.

பிறிதோர் உயிரின் துன்பத்தைத் தம்முடைய நோய்போலக் கருதி அவ்வுயிரைக் காக்காத போது ஒருவர் பெற்ற அறிவினால் ஒருபயனும் இல்லை.

**6. இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை**
**வேண்டும் பிறன்கண் செயல்.**

இன்னா எனத்தான் உணர்ந்தவை - தீங்காயின இவை எனத் தான் உணர்ந்தவற்றை; துன்னாமை வேண்டும் - சேராமை வேண்டும்; பிறன்கண் செயல் - பிறனுக்குச் செய்தல்.

தீங்கானவை இவை என்று தான் உணர்ந்தவற்றைப் பிறருக்குச் செய்யும் குணம் சேராமை வேண்டும்.

**7. எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தான்ஆம்**
**மாணாசெய் யாமை தலை.**

எனைத்தானும் - எந்த அளவிலும்; எஞ்ஞான்றும் - எந்தப் பொழுதிலும்; யார்க்கும் - எவருக்கும்; மனத்தான்ஆம் - மனதளவிலே; மாணா - பெருமை இல்லாத தீயவற்றை; செய்யாமை தலை - செய்யாதிருத்தலே உயர்வாகும்.

எந்த அளவிலும் எந்தப் பொழுதிலும் எவருக்கும் தீய செயல்களைச் செய்யாதிருத்தலே உயர்வாகும்.

**8. தன்உயிர்க்கு இன்னாமை தான் அறிவான் என்கொலோ**
**மன்உயிர்க்கு இன்னா செயல்.**

தன்உயிர்க்கு – தன்னுடைய உயிருக்கு; இன்னாமை – இவை இவை தீயவை; தான் அறிவான் – அறிந்து கொள்கிறவன்; என்கொலோ – எதற்காக?; மன்உயிர்க்கு இன்னா செயல் – நிலைபேறுடைய பிற உயிர்களுக்குத் தீங்கு செய்வது.

தன்னுடைய உயிருக்கு இவை தீயவை என்பதை அறிந்து கொள்கிறவன் அந்தத் தீங்கை நிலை பேறுடைய பிற உயிர்களுக்குத் தீங்கு செய்வது எதற்காக?

**9. பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்.**

பிறர்க்கின்னா – பிறருக்குத் தீயவற்றை; முற்பகல் செய்யின் – முற்பகலில் செய்தால்; தமக்கின்னா அவ்வாறு தீங்கு செய்தவருக்குத் தீமையானது; பிற்பகல் தாமே வரும் – பிற்பகலிலேயே தாமாக வந்து சேரும்.

முற்பகலில் ஒருவருக்குத் தீங்கு செய்தால் அவ்வாறு தீங்கு செய்தவருக்குத் தீமையானது பிற்பகலிலேயே தாமாக வந்து சேரும்.

**10. நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம்**
**நோய்செய்யார்**
**நோய்இன்மை வேண்டு பவர்.**

நோய் எல்லாம் – துன்பம் எல்லாம்; நோய் செய்தார் மேலவாம் – பிறருக்குத் துன்பம் செய்தவர் மேல்தான் ஆகும்; நோய் செய்யார் – துன்பம் செய்யமாட்டார்; நோய் இன்மை வேண்டு பவர் – துன்பம் இல்லாமையை விரும்புவர்.

பிறருக்குத் துன்பம் செய்தவர் மேல் தான் எல்லாத் துன்பமும் சேரும்; தனக்குத் துன்பத்தை விரும்பாதவர் பிறருக்குத் துன்பம் செய்யமாட்டார்.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### அங்கம் வெட்டியது

குலோத்துங்க பாண்டியனது ஆட்சிக் காலத்தில் வேற்று நாட்டைச் சேர்ந்த முதியவன் ஒருவன் மதுரையில் வந்து குடியேறினான். அவன் வாள்வித்தையைச் சொல்லிக்கொடுத்து வாழ்ந்துவந்தான். சோமசுந்தரப் பெருமானைத் தினந்தோறும் வழிபடும் குணவானாக இருந்தான். வாள் வித்தையிலே சிறந்தும் விளங்கிய அப்பெரியவனைப் பல இளைஞர்கள் சார்ந்து அவ்வித்தையை கற்றுக் கொண்டனர். அத்தகைய சிஷ்யர்களுள் சித்தன் என்பவனும் ஒருவன். அக்கறையோடு வாள் வித்தை கற்று அதிலே மிகுந்த வல்லமை பெற்று விட்டான். பலர் அவனை மதித்ததனால் மிகவும் கர்வங் கொண்டான். தவிர, தன்னுடைய ஆசிரியனுக்கு எதிரிடையாக, தானும் ஒரு வாட்பயிற்சிக் கூடத்தை நிறுவினான். சித்தனிடமும் பலர் வந்து பயிற்சி பெற்றனர். ஆசிரியனைக் காட்டிலும் அவனுக்கு வரும்படி அதிகம் கிடைத்தது.

செல்வம் பெருகியதால் சித்தனது கர்வமும் பெருகியது. தானிருக்கும்போது மற்றொரு ஆசிரியர் எதற்கு என்று கருதினான். எல்லா ஊதியமும் தனக்கே கிடைத்தால் என்ன என்று எண்ணினான். எல்லாவற்றுக்கும் மேலாகத் தனது ஆசிரியனையே ஊரைவிட்டு வெளியேற்றிவிடக் கருத்து வைத்தான். நாள்தோறும் தனது ஆசிரியனுக்கு இன்னல் விளைவிக்க முயன்றான். அம்மட்டோடு அவன் நிற்கவில்லை. தனது ஆசிரியன் இல்லாத நேரம் பார்த்து அவர் வீடு சென்று அவரது துணைவியாரைப் பார்த்து இடம் உண்டா? இடம் உண்டா? என்று துணிந்து கேட்டுத் துன்புறுத்தினான். ஆசிரியன் மனைவி சும்மா இருந்தாள். சித்தன் ஒருநாள் அவள் கையைப்பிடித்து இழுத்தான். வெளியே தள்ளிக் கதவைத் தாளிட்டுக் கொண்டு தனது கற்பைக் காத்துக்கொண்டாள் அவ்வம்மை. சித்தனிடம் காமத்தீ கொழுந்துவிட்டெரியத் தொடங்கியது. ஆசிரியனின் மனைவி

எல்லாவற்றையும் பொறுமையுடன் சகித்துக்கொண்டு சோமசுந்தரக் கடவுளை நினைத்தவாறு வருந்திக் கொண்டிருந்தாள்.

தனது பக்தையின் பொறுமையும் அவள் மௌனமாக அனைத்தையும் ஏற்று வருந்துவதையும் தன்னையே நம்பியிருப்பதையும் நன்குணர்ந்தார் சோமசுந்தரப் பெருமான். சித்தனைத் தண்டிக்கத் திருவுளங் கொண்டார். சித்தனிடம் போய், சித்தா ! இளைஞனாகிய நீயும் முதியவனாகிய நானும் வாட்போர் செய்யலாம். இருவரும் திறமையை நன்கு காட்டுவோம். நாளைக்கு நீ ஊருக்கு வெளியே வா; நானும் வருகிறேன் என்று கூறினார். நல்லது என்று சொல்லிச் சம்மதம் தெரிவித்தான் சித்தன்.

மறுநாள் செய்நன்றி கொன்ற சித்தன் போர்க் கோலம் பூண்டான். வாளாயுதத்தையும் கேடயத்தையும் கைகலில் ஏந்து வாளாசிரியர் சொன்ன களத்தை அடைந்தான். வாளாசிரியர் கோலம் தரித்த சிவபெருமானும் போருக்கு ஆயத்தமாகி, களத்திலே நின்று கொண்டிருந்தார், சித்தனின் வருகையை எதிர்பார்த்து.

ஆசிரியப்பிரானும் சித்தனும் போர் தொடங்கினர். தாக்குதல், எதிர்த்தாக்குதல், முறியடித்தல், வெட்டுதல், மறைதல், பாய்தல் என்று மாறி மாறிச் சுற்றிச் சுற்றி வந்து போராடினர். இந்த வெம்போர் இருபது நாழிகை நேரம் நடைபெற்றது. போர் உச்சநிலை அடைந்தது. வாளாசிரியப் பெருமான் யாவரும் கேட்குமாறு சித்தா ! நீ உன் குரு பத்தினியை விரும்பினாய் அவளை நோக்கித் தகாத வார்த்தைகள் பேசினாய். அவளைத் தொட்டு இழுத்தாய்; காமத்தோடு பார்த்தாய்; ஆதலால் உன்னைக் காத்துக்கொள்வாய். உனது நெஞ்சைப் பிளப்பேன், நாக்கைத் துண்டிப்பேன், கையை வெட்டுவேன், கண்களைப் பிடுங்குவேன் என்று கூறினார். கூறிய படியே சித்தனது அங்கங்களை வெட்டி வெட்டி எறிந்தார். இறுதியிலே அவனது தலையையும் வெட்டி வீழ்த்திவிட்டு மறைந்தருளினார்.

தமது வாளாசிரியருடன் வந்திருந்த மாணவர் பலரும் ஆசான் இல்லாததைக் கண்டு அவர் வீடு சென்று தேடினர். ஆசிரியர் கோவிலுக்குச் சென்றிருப்பது தெரிந்தது. உடனடியாக ஆசிரியனும் திரும்பி வந்து விட்டான். தமது ஆசிரியரைக் கண்ட மாணவர் பலவாறாக வியந்து போற்றி வினவினார்கள். ஆசிரியனுக்கு உண்மையாக எதுவுமே விளங்கவில்லை. ஆதலால் மிகுந்த வியப்புடன் நான் சித்தனோடு போராடவுமில்லை அவனது அங்கங்களை வெட்டவும் இல்லை. என்னைப்போல் வந்தவர் வேறு யாரோ? என்றான். இது மதுரை சோமசுந்தரப் பெருமானது திருவிளையாடலாகத்தான் இருக்கவேண்டும் என விளக்கினார். அவனது மனைவியும் நடந்ததையெல்லாம் ஒளிவின்றி மொழிந்தாள். குரு பத்தினி சொன்னவையும் சித்தனோடு போரிட்டவர் சொன்னதிலும் ஒற்றுமை கண்டனர் கேட்டவர்கள் எல்லாரும். அப்போது நடந்த போராட்டம் சொக்கநாதப் பெருமான் திருவிளையாடலே என்று நன்றாகத் தெரிந்துகொண்டனர். அனைவருமாகத் திருக்கோவிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்து மகிழ்ந்தனர்.

இது தெரிந்து மகிழ்ச்சியுற்ற பாண்டியன் குலோத்துங்கன் திருக்கோவில் சென்று சிவபெருமானை வழிபட்டு அடியாருக்கு எளியவரான சொக்கநாதர் பரதேசி காவலர் என்பதில் ஐயமில்லை என்று கூறி வணங்கினான்.

பின்னர் வாளாசிரியனையும் அவனது மனைவி மாணிக்க மாலையையும் யானைமேல் ஏற்றி வைத்து ஊர்வலம் செய்வித்துச் சிறப்பித்தான்.

பல நாட்கள் சென்றன. குலோத்துங்க பாண்டியன் தனது தவக்குமாரன் அனந்த குணபாண்டியனுக்கு உரிய பிராயத்தில் முடிசூட்டி வைத்துவிட்டுச் சிவபெருமான் திருவடி சேர்ந்தான்.

*(தொடரும்...)*

## விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்